உ

சிவமயம்.

# பிரம கீதை

# கைவல்லிய உபநிஷதார்த்தம் உரைக்கும் அத்தியாயம்.

இவை

## கோவிலூர் மடாலயம்
## மஹாதேவஞான தேசிகர்

அவர்கள் அனுமதிப்படி

பள்ளத்தூர்

## மு. ராம. சொ. ராம.
## முத்துவீரப்ப அய்யா அவர்களால்

---

**பள்ளத்தூர் ஸ்ரீராமன் பிரஸில்,**

பதிப்பிக்கப் பெற்றது.

1942

உ

சிவமயம்.

உலகெலா முணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதிய னம்பலத் தாடுவான்
மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்.

இரவியு மதியும் வானும் வாயுவு மனலு மப்பு
முரவிய மண்ணு மற்றையுணர்ப வன்றானு மாகிப்
பரவிடுங் கரணம் பன்னன் காயு மன்றாயு நின்றே
யுரைமன மிறந்து ளோங்கு மொளியினை
[வணங்கல் செய்வாம்.

கண்முதற் புலன்களந்தக் கரணங்கள் விளங்கு மெத்
தாற், றண்மதி யருக்க னங்கிதாரகை விளங்கு மெத்
தால், விண்முதற்பூதம் யாவும் விளங்கிடு மெத்தா லந்த
வுண்மை யைச்சிவப் பிரகாச வொளியினை
[யுளத்துள் வைப்பாம்.

பிரம கீதை

# 8-வது கைவல்லிய உபநிஷதார்த்தம் உரைக்கும் அத்தியாயம்.

நனிவேத நாலு முகமாக மேவி நளினாலயத்திலுறைவா,
னனுபோக மாக வருளா லறிந்த வவரேபரத்தையறிவார், தனி
மேவு வார்கள் பெறுஞான மாகு மிதுசாத னங்களுடைய,
முனிமேவு வான தெனுமாறு வேத மொழிபோது மாறு
மொழிவான். 1

ஈசனென் றியம்பு மொன்றை யிப்பிறப் பறுப்பார் தம்
மான், மாசற வறிய வேண்டும் வருந்தியு மறிந்து நன்றாய்ப்,
பாசமானதுகெ டுத்துப் பரப்பிரமத்தை நல்குந், தேசுடை
யறிந்த விச்சை தீர்வறத் துறந்தோர் செய்வார். 2

முத்தியின் விருப்பத் தாலு முதலவ னற்பா தத்திற்,
பத்தியி னாலு மற்றப் பரனைபே பாவிக் கின்ற, நித்தமாந்
தியானத் தாலு நிரந்தரயோகத் தாலுஞ், சித்தியா மிதுசித்
திக்கும் வினையினாற் சித்தி யாதால். 3

திரமாம ருக்கத்தி னன்மைந்த ராலுந் தீராத வற்றின்றி
யாகத்தினாலே, யுரமான வேதாந்த மாவாக்கியத்தா லுற்பன்ன
மாம் விச்சை யாநிச்ச யத்தாற், பரமான வஞ்ஞான வந்தத்தி

லேயப் படிஞான வுபதேச மொன்றுநு மேயிப், புரமாமு டம்புக்கு ளேயந்த முத்திப் பொருள்கண்டு வீடெய்து வாரிப் புவிக்கே. 4

தக்கஞா னத்தைத் தான்பெறற் பொருட்டுத் தனியிடந் தனையடைந் திதய, துக்கமே வாமற் சுகாசனத் திருந்து தோ டலைகழுத்துடம் பிவைநே, ரொக்குமா றிருத்திப் பூதிகொண் டிந்த வுடம்பையுத் தூளனம் பண்ணி, மிக்கவாய் வருமிந் தியங் களையெல்லாம் விடயமே லெழாவகை விலக்கி. 5

பத்தியாற் குரவன் பதம்பணிந் திதய பங்கயந் தனைநினைந் ததிலே, நித்தமா யொருவராணினைப் பரிதாய் நிமலமா யெங்கணு நிறைந்து, சுத்தமாய்ச் சாந்த மாயனைத் துலகுந் தோற்றுதற் கியோனியாய்ச் சுபாவ, சித்தமா யமுதா யருவமா யொன்றாய்ச் சிற்சதா னந்தமாய்ச் சிவமாய். 6

உரியநால் வேதத் தோமெனும் பொருளா யுள்ளதா யுள்ள வெப் பொருட்குங், கரியதாய் நின்ற வொன்றினைக் காள கண்டமுங் கண்ணொரு மூன்றும், பிரிவிலா மங்கை பாகமு மாகப்பேணுநற் பாவனை பெறுவா, னரியதா யருளி னால்வரும் விச்சை யதனினு லதனையே யடையும். 7

தெரிவரிய சிற்கனமாய்த் திகழ்சிவனே திசைமுகனு,
மரியுடனவ் வரனுமவ னவனமரர்க் கதிபதியுந், துரிசறவே
யக்கரமாய்ப் பரமாகுஞ் சுராட்டுமவ, னெரியுமழல் காலனவ
னிந்துவொடு பிராணனவன். 8

ஒழிந்தவொரு பொருளில்லை யுள்ளவெலா மவனேமுன்,
கழிந்தபொருண் மேலும்வரக் கடவபொரு டானுமவன்,
மொழிந்ததனி பலவிச்சை யவிச்சையெனு முற்றுமவ, னிழிந்
தபிறப் பறவேறோர் வழியில்லை யிவனொழிய. 9

இன்னதெனாமற் றன்னிடை காணத் தன்னையெப் பொரு
ளினுங்காணா, மந்நிலையடைந்தா லவன்பிர மத்தை யடையும்
வேறொன்றினா லடையான், றன்னையு மோங்காரத்தையு மரணி
யாக்கியத் தத்துவ ஞான, வன்னியைத் தியான மதனம்விட்
டெழுப்பு மதியினார் வன்பவஞ் சேரார். 10

தாக்கரும் பரமன் றன்சுதந் தரத்தாற் றன்னுடை மாயை
தன்னாலே, யாக்கின னிந்தவுடம்படைந் தறியான் போலநின்
றனைத்தையு மதிலே, சாக்கிரத் தென்னு மிடம் வகுத் தன்ன
பானமுந் தையலார் முதலாம், போக்கியங் களையும் புசித்திடுங்
கனவும் பண்ணியத் தன்மையே புசிக்கும். 11

உறங்குமவ் வியத்த மன்னிய தமத்தி னுட்புகுந் தொன்றொழி யாம, விறந்தவவ் விடத்தே தன்னுரு வான வின்பமே புசிக்குமீண் டெழுந்து, கறங்குபோ னனவை யடையினு மடையுங் கனவைவந் தடையினு மடையுஞ், சிறந்தமுப் புரமுமிவன்விளை யாடித் திரிதரச் செய்ததே திகழ்த்தில். 12

சொல்லிடும் பொருள்க ளியாவையுங் கடந்து சுதந்தரனுய்த்துவக் கின்றி, யெல்லைதீ ரின்ப மேவடி வாகி யிருந்துளவிறைவனுக் கென்று, மல்லலுண் டாகா தவையனு பவிக்கவன்னிய மாகவோர் சீவ, னில்லையே பேத மின்மையாற் சடந்தானெங்ஙனே புசிக்குமா றியம்பீர். 13

ஆதலா லறிவானந்தமா யுள்ள வமலனே யவைபுசிக் கின்று, னீதெலாம் விளையாட்டேவிளை யாடு மிடங்களே யிப்புர மூன்று, மாதலா காமை சொல்லவும் படுமோ வதிசுதந் தரனையன்னியமா, யோதலா மோவிப் புரங்களு மவன்ற னுருவமேயொழிவிலா மையினுல். 14

மாலுரு நனவு கனவுறக் கங்கள் வடிவமா நிகழ்ந்துளவிறைக்கு, ஞாலமே விசுவன் றைசதன் பிராஞ்ஞ னுமமாநவிலுவ ரடைவே, தூலமே விசுவ னுண்பன சுருக்கந் தைசதன் றுய்ப்பன சுகந்தன், பாலதா தலினுற் றன்னுடை யின்பம் பருகிடா நிற்குமே பிராஞ்ஞன். 15

புறங்கண் மூன்றிலும் போக்கிய மியாவையங்,
கிருந்து துய்ப்பவ னியாவன்மற் றியாவையும்,
பரம்பி ரமமெ னும்படி பார்ப்பவ,
னரந்தை யெய்திடா னுயிரஞ் செய்யினும். 16
விழுமி தாமய மேதங்கள் செய்யினும்
பழுமி கும்பஞ்ச பாதகம் பண்ணினு
மொழிவு றுமலொன் றேயென் றுணருவா
னழுவி னுனந்த நன்மையுந் தின்மையும். 17

சீவ னன்று புரமூன்றிற் சித்தா மவனே விளையாடு, மேவு மெல்லா மெய்போல வவனு[illegible]த லான்மெய்யத், தேவ னேசான் முதலினுற் சித்து மவனே யத்துவிதன், யாவுந் தானு தலிலெதினுந் தனேயே விரும்ப லாலின்பன். 18

இந்தப் புரங்க ளொருமூன்று மிவன்ற னிடையே யிறப் பதுநிர்த், தொந்தப் புருட னொருகாலு நசியா னுத லாற் சொல்லு, மந்தப்பிரம மேயிவன்று னறியா மையினு லப்பா ளைப், பந்தப் படுமோர் சீவனெனப் பார்ப்பார் பவத்தே பதைக்கின்றார். 19

ஈன மாகிவி டும்பி ராணன்ம னங்க ளிந்திய மியாவையும், வான மூதைநெ ருப்பு நீர்புவிமற்று மந்தம கத்திலே, யான தாகிலு நண்மை யாமதி னுண்மை யாமது வாகுமெய்ஞ், ஞான நாடிய தத்து வங்களெ னும்ப தங்கண வின்றதே. 20

நீயெ னும்பொரு ளேய தென்றுநி கழ்த்தி டும்பொரு ளாவதுந், தூயசிற்பரமேபதங்களிரண்டி னுந்துணி வாதலான் மாயையென்றும வித்தை யென்றுமு பாதி பேதவழக்கினு, லாய கற்பித பேத மல்லத பேதமேபொரு ளாவதே. 21

ஆத ரத்தொட விச்சை நாமம றுத்தநல்லறி காரியைப் போதமுற்றுமெ னப்பு கன்றது பொய்யி லாமறை யையமன்; றேதமற்றது நானெ னுந்திட னவனேயஃ தெய்தினு, னேது முத்திய வன்ற னுள்ளனு போக மிங்ஙனு திப்பதாம். 22

புகலுமுப் பதத்திற் போகம் போக்கியம் புசிப்பா னேநா, னிகழுமித் தனைக்குஞ் சான்றாய் நின்றதற் சொருப னேநா, னிகழுவதென்பா லென்பா னிற்பது மிறப்ப தென்பாற், சகலமு மாத லாலே தற்பரம் பொருளாகின்றேன். 23

அணுவினுக் கணுவு நானே யப்படி மகத்து நானே, துணியிலெப் பொருளுநானே சோதியுட் சோதி நானே, பணி வுறத் தகுவே னானே பழையனும் புருட னானே, யிணைதனக் இல்லா வீச னாகிய வின்பநானே. 24

கண்ணுஞ் செவியு மின்றியுமே காணக் கேட்கக் கடவே னான், பண்ணுந் தொழிலெல் லாம்வல்லேன் பாணி பாத மில் லெனினு, மெண்ணுங் கடந்த விடமிங்கே யிருந்துஞ் செல்வ னொருவர்க், கொண்ணும் படியன் றெனையுணர வெல்லா முணரு கின்றேனான். 25

ஓது வேதம் பலவா லுமோதி யுணரப் படுவேனான், வேத வேதந் தப்பொருள்க ளெல்லாம் விளங்க வறிவேனான், நீது

நன்றும் வினைமரணஞ் செனனந் தேகேந் தியப்புத்தி, பூத மைந்து மின்றியக மிதமாய் நானே புரிக்கின்றேன். 26

சிறப்புடைய தேசுவடி விற்றிகழ்த லானு
னெறித்தவடி வாலுமெறி யாவடிவி னாலு
நிறத்தசுட ரானவடி வாகநிகழ் கின்றே
னிறத்தலில ஞனபர மீசனவ னியானே. 27

எனையொழி யவொன்று மிலையெலா மெனதுரு வென்று நிகழ்வதோ, ரனுபவம் வந்து விளையுமே லழிவுள தன்றி யமலமா, யினிதுற நெஞ்சி லுறைவதா யிலதுள தன்றி யெதுவுமா, யனியமி றந்தபிரமமா மறிவுருவொன்றை யடையுமே. 28

கைவல் லியவுப நிடதங் கருணையி னாலே யெதுகரு திக் கூறிற், றுய்வில் லையநிய மொன்று லெனவரி பிரமா திகளுக வாநின்று, ரெவ்வல் லியிலுள வதிகா ரிகளும தறியும் படியினி திற்சொன்னே, னவ்வெல் லையில்பொரு ளதிபத் தியொடறி வுறுவீ ரமரர்க ளனைவீரும். 26

பண்டைநான் மறைகள் சொல்லிய பரிசே பரகுரு வாயிருந் துள்ள, வண்டர்நா யகனை யாதரித் தவன்ற னருளினு லநுபவ மாகக், கண்டுளோ ரிருக்குந் தன்மையை யெல்லாங் காதலால் வானவர்க் குரைத்தான், புண்டரீ கத்தே யிருந்துதான் சகல பூதமும்படைத்திடும் புநிதன். 30

8-கைவல்லிய உபநிஷதார்த்தம்
உரைகரும் அத்தியாயம்
முற்றிற்று.
ஆகச் செய்யுள்-30

சிவமயம்.

ஈசனுக் கன்ப ரானூர்க் கன்பனு மிறைவ போற்றி,
நாசமற் றிருப்பாய் போற்றி நாரணற் கினியாய்
[போற்றி,
யாசையற் றவர்க்கு ஞான மருளுவாய் போற்றி
[யல்லாப்,
பாசமுற் றவரை வெய்ய பவத்திடும் பகைவ
[போற்றி. 1

அண்டருக் கதிப ராலு மறிந்திடற் கரியாய்
[போற்றி,
பண்டுடைப் புவன மெல்லாம் படைத்திடும் பரனே
[போற்றி,
கண்டிடப் படாதே யெல்லாங் கண்டிருக் கின்றுய்
[போற்றி,
புண்டரீ கத்தில் வாழும் புனிதனே போற்றி
[போற்றி. 2

---

